


# ஆரோவில்

## செய்திமடல்

கிளை - 27 | ஜூலை – 2024 | இலை - 10

## கௌதமபுத்தர் – சித்தார்த்தர்



**புத்தம் சரணம் கச்சாமி**
**தம்மம் சரணம் கச்சாமி**
**சங்கம் சரணம் கச்சாமி**



# திருக்குறள்

**பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா**
**பிற்பகல் தாமே வரும்** **(இன்னாசெய்யாமை 319)**

பிறருக்குத் தீமையைக் காலையில் செய்தால், மாலையில் அதன் விளைவை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

உரை: **கவிஞர் சிற்பி**

## ஆசிரியர் பக்கம்

### தமிழகமும் பௌத்தமும்

ஈராயிரம் ஆண்டுகளாகவே பௌத்தமதம் தமிழகத்தில் வேரூன்றியிருந்ததை மணிமேகலை போன்ற பெருங்காப்பியங்கள் வாயிலாகப் பயின்று வருகிறோம். தமிழகத்தின் முன்னோடிக் கல்வி, கலை நகரமாகிய காஞ்சியில் ஜைன, சிவ, விஷ்ணு பகுதிகளுடன் புத்த காஞ்சியும் வளர்த்தெடுக்கப்பட்டதாக வரலாறு கூறுகிறது. சில ஆண்டுகளுக்கு முன்னர் ஆரோவில் வந்திருந்த அருளாளர் தலாய்லாமா அவர்கள் தமிழகத்தில் வாழ்ந்த புத்த சமயாச்சாரியார்களின் உரைகளைப் படித்தே தாம் தம்மைச் செழுமைப்படுத்திக் கொண்டதாகத் தெரிவித்தார். அந்த உரையைத் தமிழில் மொழிபெயர்த்துப் பேசும் பணியினை எனக்கு அவர் அருளியதும், பின் பட்டுச்சால்வை போர்த்தி வாழ்த்தியதும் மறக்க இயலாத அனுபவங்கள்.

அண்மையில், தமிழகம் தந்த பௌத்த அறிஞர்கள் எனும் குறுநூல் மீண்டும் எனது தனி நூலகத்தில் கையில் தட்டுப்பட்டது. வியப்பு. மகான்கள் மகாவீர், கபீர் பற்றி எழுதி வரும்போதே எனக்குள் தோன்றிய எண்ண அலைகள்தாம் இந்நூல் வழி என்னைத் தொட்டுவிட்டன என்று மகிழ்ச்சியுற்றேன்.

கி.பி 2ஆம் நூற்றாண்டிலிருந்து 13 ஆம் நூற்றாண்டுவரை தோன்றியுள்ள பௌத்த அறிஞர்கள் தமிழ் நிலத்தில் விளங்கிய பௌத்த விகாரைகளில் வாழ்ந்து பௌத்த நெறிகளைப் பாலி மொழியிலும், சிங்கள மொழியிலும், சீனமொழியிலும் எண்ணற்ற படைப்புகள் வாயிலாக உலகிற்கு அளித்துள்ளனர் என்பதை இந்நூலிலிருந்து நாம் அறிந்துகொள்கிறோம்.

இந்நூலினை இயற்றியுள்ளவர் பெருந்தவத்தர் பிக்கு போதிபாலர். இவர் தர்ம விஜயமஹா விகாரை எனும் புத்தர் கோவிலைத் தமிழகத்தில் உருவாக்கியுள்ளார். பிக்கு போதிபாலர் இலங்கை சென்று பயின்று வந்தவர். சீனப்பெருநாட்டிற்கும் பௌத்த நெறியைத் தந்துள்ள முதன்மை, தமிழ் மண்ணில் தோன்றிய தமிழரையே சாரும் எனும் உண்மையை அறிந்துகொண்டார். புத்த உலகம் எனும் தமிழ்ச்சொல் சீன உச்சரிப்பில் பொத்த லோக என்று மருவியுள்ளது என்று நிறுவுகிறார் ஆசிரியர். இலங்கைக்குப் பௌத்தம் செல்லும் முன்னரே தமிழகத்தில் பௌத்தம் உச்சநிலையில் இருந்துள்ளது என்பதையும் எடுத்துரைக்கிறார்.

அருள்மிகு பிக்கு போதிபாலரின் இக்குறு நூலில் ஏராளமான செய்திகள்



## அன்னையின் அருள்மொழி

**ஒரே சமயத்தில் செயலற்றும் பூரண தூய்மையுடையதாயும், ஒரே சமயத்தில் உள் நோக்கியும் வெளி நோக்கியும், வெளிப்பாட்டின் விளைவுகளையும் வெளிப்பாட்டின் மூலங்களையும் நோக்கித் திரும்பிய கண்ணாடிபோல் மனிதன் இருக்கவேண்டும் அப்பொழுது விளைவுகளெல்லாம் வழிகாட்டும் இச்சா சக்தி முன்வைக்கப்படவேண்டும். அந்த இச்சா சக்தியின் ஸித்தி பெறும் சக்திகொண்ட செயலாகவும் இருக்கமுடியும். தான் செயலற்று வருவதை ஏற்கும் தன்மை ஸித்தி பெறும் சக்தி கொண்ட செயலில் ஈடுபடும் தன்மை, இந்த இரண்டையும் இணைப்பதுதான் எல்லாவற்றிலும் மிகக் கடினமான வேலை. ஆனால் எம்பெருமானே, அதைத்தான் நீ எங்களிடம் எதிர்பார்க்கிறாய், நீ எங்களிடம் அதை எதிர்பார்த்தால், அதில் வெற்றியடைய நீ வழி செய்வாய் என்பது நிச்சயம். .**

**ஸ்ரீஅன்னை**

கொட்டிக் கிடக்கின்றன. தமிழின் உன்னதக் காப்பியமான மணிமேலையின் கதைத்தலைவி மணிமேகலை அமுதசுரபியின் துணைகொண்டு பசிப்பிணி போக்கும் மருத்துவியாகச் செயல்படுகிறாள். புத்த தர்மம் கேட்டு அரஹந்த நிலை எய்த அறவண அடிகளை நாடுகிறாள் அல்லவா? யாரிந்த அறவண அடிகள்? காவிரிப்பூம்பட்டினத்தின் சங்க நாயகர் இவர். அசோக சக்ரவர்த்தியின் மைந்தன் மகேந்திரன் கட்டுவித்த புத்தவிகாரையில் வாழ்ந்து இருக்கலாம் எனக்கருத இடம் உள்ளது. மாசாத்துவான், மாதவி, மணிமேகலை இவர்கள் எல்லாரும் இவரிடத்துச் சரணம் அடைந்துள்ள செய்தி காப்பியவழி அறியலாகும்.

நாகப்பட்டினத்தில் அசோகர் கட்டுவித்த விகாரையில் வாழ்ந்த ஆச்சாரிய தம்மபாலர் இவர்தான் என்றும் சில அறிஞர்கள் கூறுகின்றனர். இருந்த போதிலும் இந்நூலாசிரியரின் ஆய்வுகளின்படி அறவண அடிகள், ஆச்சாரிய தம்மபாலர், தர்மபாலர் இவர்கள் மூவரும் வெவ்வேறு துறவிகளே; பெயர் ஒற்றுமைகண்டு குழப்பம் வேண்டாம் என்று தெளிவுபடுத்துகிறார்.

கி.பி 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புத்ததத்தர் சோழர்களின் தலைநகராக விளங்கிய உறையூரில் பிறந்தவர். பாலி மொழி இலக்கியம் இவ்வூரை உறகபுரம் என்று குறிப்பிடுகிறது. தஞ்சை அருகிலுள்ள பூதமங்கலம் ஊரில் இருந்த பௌத்த விகாரையில் புத்ததத்தர் தங்கியிருந்ததாகச் சொல்கிறார். பாலி மொழியில் சுமார் ஆறு நூல்களை யாத்துள்ளார். உறையூரிலும் பூதமங்கலத்திலும் இருந்து நூல்கள் இயற்றியதோடு, இலங்கைக்கும் சென்று அங்கிருந்தபோது உத்தரவி நிச்சயம், ருபாரூபவிபாகம், ஜினலங்காரம் எனும் நூல்களைப் படைத்துள்ளார்.

கணதாசர் என்ற உபாசகர் காவிரிப்பூம்பட்டினத்தில் ஒரு விகாரைக் கட்டினார் என்ற செய்தியையும் புத்ததத்தரின் எழுத்து வாயிலாக நாம் தெரிந்து கொள்கிறோம்.

மற்றொரு ஆசிரியர் புத்தகோஷர். ஆந்திர மாநில தெனாலி ஊரைச் சேர்ந்தவர் என்றும் தமிழகக் காஞ்சி அருகிலுள்ள மரோணம் என்னும் ஊரினர் என்றும் இருவேறு கருத்துகள் நிலவினாலும் ஜப்பானிய சிங்கள புத்த அறிஞர்கள் இவர் தமிழகத்தைச் சேர்ந்தவர் என்று கூறுகின்றனர். புத்தகோஷர் புத்ததத்தரின் சமகாலத்தினர். அவர் தமிழகத்திலுள்ள பௌத்த விகாரைகளில் தங்கித் தமது வாழ்நாள் முழுவதையும் எழுத்துப்பணிக்கே அர்ப்பணித்துள்ளார் என்று அறிகிறோம். ‘விசுத்தி மக்கம்’ எனும் நூலினை இலங்கை அனுராதபுரத்தில் தங்கியிருந்தபொழுது எழுதியுள்ளார். ஏறத்தாழ 20க்கும் மேற்பட்ட உரைநூல்கள் வழங்கியுள்ளார். இந்நூல்கள் இன்றளவும் பௌத்த நாடுகளில் பயிலப்பட்டு வருகின்றன என்பதைச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார் இந்நூலாசிரியர் பிக்கு போதிபாலர்

இந்நூலாசிரியரின் இயற்பெயர் தினகர ரூபன். தமிழ்நாட்டின் சிவகங்கையைச் சேர்ந்தவர். 18 மே 1955 இல் பிறந்தவர். பட்டப்படிப்பிற்குப்பின் அரசுப்பணியில் அமர்ந்தார். பின் காந்தியச் சிந்தனையிலும் பௌத்த சமயத்தின் அகிம்சைக் கோட்பாடுகளிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டார். தொடர்ந்து தம்மைக் கல்வி கேள்விகளால் உயர்த்திக்கொண்டு, புத்தகயாவில் தேரவாத பௌத்தத் துறவிகளோடு இணைந்து, தீட்சைப்பெற்று ‘போதிபாலர்’ எனும் பெயர் கொண்டுள்ளார். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல நூல்கள் செய்துள்ளார். மேலும் தமது நம்பிக்கைகளை வலுவாக்கிடவும் மக்களிடையே பணி செய்யவும் மதுரை மாவட்டம், வாடிப்பட்டி, குட்லாடப்பட்டி கிராமம்,தாடகநாச்சிபுரத்தில் ‘தர்ம விஜய மகாவிகாரை’ எனும் தவக்குடில் நிறுவியுள்ளார். பௌத்த சமயச் சிந்தனைகளைப் பரப்பி வருகிறார் என்ற குறிப்புகளைத் தமிழகம் தந்த பௌத்த அறிஞர்கள் (கி.பி. 2 ஆம் நூற்றாண்டு முதல் 13 ஆம் நூற்றாண்டு வரை) எனும் இப்பொன்னேடு வழங்குகிறது. மேற்கொண்டு இத்துறை



பற்றி ஆய்வு செய்ய விரும்புகிறவர்களுக்கு இக்குறுநூல்தரும் தகவல்கள் உறுதுணையாக இருக்கும். (இந்நூல் விற்பனைக்கு அல்ல)

நூல் - தமிழகம் தந்த பௌத்த அறிஞர்கள்
ஆசிரியர் - பிக்கு போதிபாலர்
வெளியீடு - தர்ம விஜய மஹாவிகாரை
நூல் வெளியீட்டுக் குழு
தாடக நாச்சிபுரம்
குட்லாடம்பட்டி - 625 218
மதுரை மாவட்டம்
10.05.2001
அணிந்துரை - தமிழ்ப்பேராசிரியர் மதுரை வீ. முத்துசாமி

தவநிலை வாழ்க புத்த தர்மம் வாழ்க பேருலகு வாழ்க என நிறைவு செய்துள்ளார்.

வையகம் வாழ்க
எனும் வாழ்த்துடன்
**இரா.மீனாட்சி**



**அன்பே தெய்வம் அறிவே தெய்வம் ஆனந்தமே தெய்வம்**
**பண்பே தெய்வம் பரிவே தெய்வம் பணியே நம்தெய்வம்**

## அரவிந்தர் சிந்தனைப் பொறிகள்

நம் பண்டைய பெருங்காப்பியக் கலைஞராகிய வால்மீகி, அறிவொளி பெற்ற, நீதியுடையதொரு சமுதாயத்தின் அறிகுறிகளாக, அனைவரிடமும் திகழும் கல்வி, அறநெறி, ஆன்மிகம் ஆகியவற்றை மட்டும் குறிப்பிடவில்லை; “தகுதியற்ற உணவை உண்ண வேண்டிய கட்டாயம் எவருக்கும் இராது. மணிமுடி அணியாதோர் இரார். நறுமணத் தைலம் பூசாத எவரும் இரார். வாழ்வின் இன்பங்களில் ஒரு சிறு அற்பப் பாகத்தை மட்டுமே கிடைக்கப்பெறுவதாகிய குறுகிய நிலை எவருக்கும் இராது” என்றும் அவர் கூறுகிறார்.



## அனுபவ மணித்திரள்கள்

## உலகப் பழமொழிகள்

### இ / ஈ

**இ**ருப்பிடம் - எங்கே செல்வச் செழிப்பு இல்லையோ எங்கே தெய்வ ஆச்சார்யன் இல்லையோ எங்கே நீதிபதி இல்லையோ எங்கே ஆறு இல்லையோ எங்கே மருத்துவர் இல்லையோ அங்கே மனிதன் இருப்பிடத்தை அமைத்துக்கொள்ளக் கூடாது.

**- பாரதம்.**

**இ**ரும்பு - தங்கத்தின் தாறுமாறைவிட இரும்பின் ஒழுங்கே சிறந்தது.

**- ஜெர்மன்**

**இ**லைகள் - இலைகளின் இரத்தினம் வண்ணத்துப் பூச்சிகள்

**- வெல்ஷ்**

**இ**ழப்பு - திங்கட்கிழமை இழக்கிறவன் வாரம் முழுவதும் இழக்கிறான்.

**- ஜியார்ஜியன்**

**இ**ளமை - இளமையில் விதைக்காதவன் முதுமையில் அறுக்கமுடியாது

**- லிவோனியன்**

**இ**ன்று - நாளைக்கு ஓர் எருதைவிட இன்று ஒரு முட்டை மேல்

**- ருமேனியன்**

**ஈ**க்கள் - சிங்கம்கூட ஈக்களிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

**- ஜெர்மன்.**

**நூல் – உலகப் பழமொழிகள்**
**சு. லட்சுமி நாராயணன்.**



## நமது மையத்திற்கு வரப்பெற்றுள்ள தமிழ் வெளியீடுகள் பகிர்வு – நன்றி

| வ.எ | மாதம் | இதழ்களின் பெயர் | பாராட்டுகள் |
|---|---|---|---|
| 1 | 50 & 52 ஆடி ஏப்ரல்–செப்டம்பர் 2024 | காவ்யா காலாண்டிதழ் சென்னை | காவ்யா சண்முகத்திற்கு |
| 2 | ஜூன் மாதம் | இனிய நந்தவனம் திருச்சி | நிறைவுப்பகுதி கவிதை இனிமை |
| 3 | இதழ் – 51 ஏப்ரல்,மே,ஜூன் 2024 | மணல்வீடு சேலம் குட்டப்பட்டி | அட்டையின் கனபரிணாமங்கள் கண் அழகுகள், புறமும், அகமும், கோட்டோவிய ஈர்ப்புகள் |
| 4 | மாத இதழ் 2024 | புதுவை பாரதி புதுவை | மலர்ச்சோலை பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் பச்சிலைப் பாதை |
| 5 | காலாண்டிதழ் | முல்லைச்சரம் சென்னை | இலக்கிய நறுமணம் எப்போதும். |
| 6 | ஜூன் மாத இதழ் | சர்வோதயம் மலர்கிறது– மதுரை | காந்தியம் இன்னும் செழித்தோங்கி வருகிறது. நம்பிக்கைத் தருகிறது. |
| 7 | ஜூன் மாத இதழ் | ஆனந்த சாகர் சென்னை | ஸ்ரீஅரவிந்த அன்னையைப் பற்றிய அற்புதமான பதிவுகள் பயிற்சிகள் |
| 8 | காலாண்டு இதழ் | வைகறை புதுவை. | எளிய தமிழில் ஸ்ரீஅரவிந்தர் ஸ்ரீஅன்னை தொடர்பான சிறப்புச் செய்திகள் |
| 9 | காலாண்டு இதழ் | பிரார்த்தனா ஆரோவில் | சாவித்ரி பவன் ஆய்வுகள் நல்ல தமிழ் வாசிப்பு அனுபவம். |

## வாசகர் குரல்

ஆரோவில் செய்திமடல் வந்தது கண்டேன் களிப்படைந்தேன். அட்டைப்படக் குழந்தைகள் குழந்தையும், தெய்வமும் ஒன்று என்ற கருத்தை வலியுறுத்தினர். திருவள்ளுவர் வரலாறு பல்வேறு தகவல்களைத் தந்து வியக்கவைக்கின்றது. கரூர் நாடு சித்தர் பூமியாகப் பல்காலும் அறியப்பட்ட நாடு. குறள் நெறிச்செம்மல் திரு பா. கமலக்கண்ணன் அறிமுகம் அருமை. அவர் முகவரி தந்து உதவியமைக்கு நன்றி. பண்பாட்டுப் பயணக்கட்டுரை முழுமையான தகவல்கள் தந்தது பாராட்டிற்குரியது. மதுரை மல்லி மணக்கின்றது. அவரைப் பிஞ்சு முற்றியதும் எனக்கும் வேண்டும்.!

– அ.அமரநாதன் புதுச்சேரி.

மேலும் நமது வாசகர்கள் பலர் அன்புடன் கருத்துகளைப் பகிர்ந்து கொண்டுள்ளனர். அவர்களது தொடர்ந்த கவனமொழிகளுக்கு நன்றி.

– ஆசிரியர்.



கட்டுரை

# எழுத்தும் ஏடும்

தமிழர் வரலாற்றில் மின் நூல்களுக்கும், அச்சுப் புத்தகங்களுக்கும் முன் ஓலைச் சுவடிகள்தாம் இருந்துள்ளன. ஓலைச்சுவடிகளுக்குப் பனைமர ஓலைகள் தேவைப்பட்டன.

எனவே பனை மரங்கள் நம் மக்களின் வாழ்வோடு, கல்விக் கருவூலங்களோடு இணைந்து இருந்து வந்துள்ளன. பனந்தோப்பு, பனங்காடு, பனைவிளை, பனையூர், பனங்குளம், பனையபட்டி, பனைமரத்துப்பட்டி என்றெல்லாம் ஊர்ப்பெயர்கள் உள்ளன. பனைமரங்களை தலவிருட்சமாகக் கொண்டுள்ள திருக்கோவில்களும் தமிழகத்தில் உள்ளன. பனையைக் கற்பகவிருட்சம் என்றும் அழைப்பதுண்டு. வேர் முதல் நுனிவரை பனையின் அத்துணைப் பகுதிகளுக்கும் பயன் இருக்கிறதை நமது மூத்தோர் நாட்டுப்புற இலக்கியங்களிலும் மொழிந்திருப்பார்கள்.

திருக்குறளில் தானியத்துள் தினையும் மரங்களுள் பனையும் பேரிடம் பெற்றுள்ளதை அறிந்துள்ளோம் அல்லவா? கி.மு. முதலாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட திருக்குறள் குறைந்த பட்சம் பத்து முறைகளுக்கு மேலாவது மறுபிரதி எடுக்கப்பட்டிருந்ததால்தான் சென்ற நூற்றாண்டில் அச்சிலேற்றப்பட்டு நூல்வடிவம் அடைய இயன்றுள்ளது. என்பது வரலாற்று உண்மை. ஒரு முறை பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதப்பட்டு உரிய முறையில் பாதுகாக்கப்பட்டால் ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகள் நூலாக நிலைபெற்றிருக்கும் என்று அறிகிறோம்.

பனைமரவகைகள் சில – தாளிப்பனை, கூந்தல் பனை, லாந்தர் பனை ஆகும். இவற்றில் வளரும் குருத்து ஓலைகளை நறுக்கி எடுத்துவந்து பதப்படுத்த வேண்டும். சாதாரணமாக, ஏடுஏடாய் கவனம் செய்தபின் சரியான அளவிற்கு வெட்டி எடுத்துக்கொண்டு மஞ்சள் தூளைக் குழைத்துப் பூசி தனித்தனி ஓலை நறுக்குகளில் எழுத்தாணியால் எழுதி நூலால் கட்டித் தொகுத்து வைப்பார்கள். எழுதியபின் நெருப்புச் சுடரில் கிடைத்த கரி, மஞ்சள் தடவுவது வழக்கமாக இருந்துள்ளது. வேம்பு, வசம்பு, எலுமிச்சம் புல் எண்ணெய் (லெமன் கிராஸ் ஆயில்), கற்பூரத் தைலம் போன்ற இயற்கைப் பூச்சுகளைத் தடவி துணியில் சுற்றியும் பனைமரக் கட்டைகளையே மேல்உறை போட்டும்

ஈரோட்டைச் சேர்ந்த விமலி பனங்கிழங்கில் மால்ட் தயாரித்து விற்பனை செய்துவருகிறார் . பனை சார்ந்த பொருட்களைப் பயன்படுத்துவது வீட்டிற்கும் நாட்டிற்கும் நல்லது என்கிறார் விமலி.

பனங்கிழங்கில் கால்சியம் சத்துகள் அதிகமாக இருப்பதால் எலும்புகளுக்கு வலு சேர்க்கும் நோயெதிர்ப்புச் சக்தியை அதிகரிக்கும். இரத்தத்தில் ஹீமோகுளோபினை அதிகரிக்கும். நார்ச்சத்து நிறைந்தது என்பதால் மலைச்சிக்கலை எளிதாகத் தீர்க்கும், குடல் அழற்சி, வயிறு மந்தம், செரிமானமின்மை போன்ற பிரச்சினைகளுக்கு பனங்கிழங்கு சிறந்த உணவு. பனங்கிழங்கில் குறைவான கிளைசமிக் இண்டெக்ஸ் இருப்பதால் மெதுவாகச் செரிமானம் செய்து குளுக்கோஸ் அளவையும் மெதுவாக உயர்த்துகிறது. எனவேதான் இது சர்க்கரை நோயாளிகளுக்கு மிகச் சிறந்ததாக கருதப்படுகிறது.





நம் முன்னோர்கள் நூல்களைப் பாதுகாத்து வந்துள்ளனர்.

ஏறத்தாழ கி.பி.19 ஆம் நூற்றாண்டுவரை பனை ஓலைச்சுவடிகளில் எழுதிவைத்த நூல்களைப்பற்றி எவ்வளவோ சொல்லலாம். ஓலைச்சுவடிகளில் எழுதிவந்த எழுத்துகளை (1)கண்ணெழுத்து (2) வட்டெழுத்து (3) குயிலெழுத்து (4) கோலெழுத்து என்று வகைப்படுத்துகின்றனர் வல்லுநர்கள்.

இத்தகைய ஓலைச்சுவடிகளில் வழங்கிய பழந்தமிழ் இலக்கியங்களை மீட்டெடுத்துப் பதிப்பித்து, அச்சில் தந்த பெருமைக்குரியவர் தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையர். அவருடைய முயற்சியால் 3000க்கும் கூடுதலான ஓலைச்சுவடிகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன என்பது வணங்கிப் பாராட்டப்பட வேண்டிய செய்தியாகும்.

தமிழர் நாகரிகம், தமிழினம் வறிய நிலைக்குப் தள்ளப்படாமல் தமிழ்த்தாத்தாவால் காப்பாற்றப்பட்டுள்ளது.

இன்றளவும் நாம் நமது மொழியில் கையாளும் ஏடு, நூல், தாள், நறுக்கு, மடல், சுவடி, ஓலை, தூக்கு போன்ற புத்தகங்கள், கடிதங்கள் சார்ந்த சொற்கள் எல்லாமே பனை மரத்துடன் தொடர்புடையன என்பதை அறியும்பொழுது பனைமரத்திற்கு நாம் நன்றி மட்டும் கூறினால் போதுமா?

இன்னும் எங்கேயோ யார் வீட்டுப் பூசை அறையிலோ, பரணிலோ, பெட்டகங்களிலோ பனைவோலை ஏடுகள் கவனிப்பாரின்றிக் கிடக்கலாம் உங்களுக்குத் தெரிய வந்தால், ஓலைச்சுவடிகளைப் பத்திரப்படுத்தி உரியவர்களிடம், சொல்லி சுவடிகளைப் பாதுகாத்திட ஏற்பாடு செய்யுங்கள்.

உங்களால் இயன்ற அளவிற்கு இந்த அழிந்துவரும் செல்வங்களைப் பாதுகாத்திட உறுதுணையாக இருக்கலாம் நாட்டில் உள்ள பனைமரங்களை அழிவிலிருந்து மீட்கலாம்.

மேலும் பனைவிதைகளைச் சேகரித்துப் புதுப்பனைமரங்களை வளர்க்கலாம்.

தகவல் – டாக்டர் இலட்சுமி நரசிம்மன் கோயமுத்தூர்.

## சிரத்தாஞ்சலி

நம்முடைய ஆரோவில் பெருங்குடும்பத்தைச் சார்ந்த அருமையான மக்கள் சிலபேர் அண்மையில் காலம் ஆகிவிட்டார்கள். தாங்கவியலாத துக்கத்துடன் அஞ்சலி செலுத்துகிறோம்.

- ஆரோவில் யு.டி.எஸ் வாகன நிறுவனப் பொறுப்பாளரும் வழிகாட்டியுமான தோழர் கிருஷ்ணன் உடல் நலமின்றி இருந்தார்; அவர் இறைவனடி எய்தினார்
- நிலஅளவீட்டுத்துறையில் பணியாற்றி ஆரோவில்லின் முன்னேற்றத்திற்காக உழைத்த கயிலைமணி சகோதரர் மகாலிங்கம் நம்மைப் பிரிந்தார்.
- குருபிரசாத் எனும் கூபி பிரெஞ்சு தேசத்தவர் ஆரோவில் மக்களின் உடல்நலம்பேணியவர்.ஸ்ரீஅன்னையின் திருவடிகளில் இணைந்தார்.
- மாத்ரிமந்திரில் ஊழியராகப் பணியாற்றிய சகோதரர் கஜேந்திரன் மறைவு அனைவரையும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. அவரது ஆன்மா சாந்தியடையப் பிரார்த்திக்கிறோம்.

இந்த நல்ஊழியர்களைப் பிரிந்து வாடும் குடும்பத்தினருடன் நமது ஆறுதல் மொழி களைப் பகிர்ந்து கொள்கிறோம். ஓம் சாந்தி

## படித்ததில் பிடித்தது!

மாவீரன் அலெக்சாண்டர் முன்னிலையில் டியோண்டஸ் என்ற கடல் கொள்ளைக்காரன் நிறுத்தப்பட்டான். அலெக்சாண்டர் அவனைப் பார்த்து, “இத்தகைய நாச வேலைகளைச் செய்ய உனக்கு எங்கிருந்து துணிவு வந்தது?” எனக் கேட்டான். அவன் "அரசே, உலகத்தையெல்லாம் அடக்கி ஆள வேண்டுமென்ற துணிவு உங்களுக்கு எங்கிருந்து வந்ததோ. அங்கிருந்துதான் எனக்கும் இந்தத் துணிவு வந்தது” என்று கூறினான். “அதென்ன அப்படிப் பேசுகிறாய்?” என்று கேட்டான் அலெக்சாண்டர். “உண்மையாகத்தான் சொல்கிறேன் அரசே! என்னிடம் ஒரு கப்பல் இருப்பதால் நான் கொள்ளைக்காரன் என்று பேசப்படுகிறேன். தங்களிடம் ஒரு மாபெரும் கடற்படை இருப்பதால் தாங்கள் மாவீரன் என்று புகழப்படுகிறீர்கள். நாம் இருவரும் செய்யும் செயல் அளவில் சிறிது பெரிதே தவிர, வேறு எதுவும் வேற்றுமை இல்லையே!” என்று சொன்னான் டியோண்டஸ். இம்மொழிகளைக் கேட்ட அலெக்சாண்டர் வேறு எதுவும் பேசாமல் அவனை விடுதலை செய்தான்.

# அருவி போல வாழ்வோம்



சிறுவர் இலக்கியம்

அதோ பாரு அருவி
ஆர்ப்பரித்துக் கொட்டுது.

திடும் திடும் திடுமென்று
பாறை மேளம் தட்டுது

ஊத்துத் தண்ணி உள்ளிருந்து
மகிழ்ச்சியோடு பொங்குது.

மலையுச்சி தாவி வந்து
மழலை போலக் குதிக்குது

முத்துப் போல நீர்த்துளிகள்
துள்ளித் துள்ளித் தெறிக்குது

சில்லென்று சாரல் வந்து
அள்ளி நம்மைக் கொஞ்சுது

வெள்ளி நிறத்தில் நீர்ததும்பி
உள்ளம்போல நிறையுது

புல்லும் பூண்டும் செடிகளுமே
பரவசமாய் நனையுது

பள்ளம் நோக்கி விழுந்தாலும்
கள்ளம் ஏதும் இல்லையே

வாழும் உயிர்கள் மகிழவே
வீழும் அருவி போலவே

பிறருக்கு உதவி வாழுவோம்
பெருமையோடு திகழுவோம்.

- ஆதியப்பன்

## அறிவோம் நம் தமிழ் -XXI
## தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| INCOME | வருவாய் |
| | வருமானம் |
| | ஊதியம் |
| | ஆயம் |
| | வாரி |
| | வளம் |
| | ஆகாறு |
| INCREMENT | அதிகரிப்பு |
| | கூடுதல் |
| | உயர்வு |
| | மிகைப்பாடு |
| | ஓங்கல் |
| | பெருக்கம் |

நன்றி: ஆங்கில – தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.
International Advanced Deluxe Dictionary.

இந்தியப் பறவை மனிதர் சலீம் அலியின் நினைவு நாள் ஜூலை 27. அவர்தம் நினைவைப் போற்றுவோம்.




## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : இரா.மீனாட்சி
வடிவமைப்பு : சொ.அருணன், புதுவை.
அச்சு : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ், சிவகாசி.